# ॥ अर्धनारीश्वरस्तोत्रम् ॥

## அர்தநாரீச்வர ஸ்தோத்ரம்

(1)

चाम्पेयगौरार्धशरीरकायै
कर्पूरगौरार्धशरीरकाय ।
धम्मिल्लकायै च जटाधराय
नमः शिवायै च नमः शिवाय ॥

சாம்பேய கௌரார்த்த சரீரகாயை
கர்பூர கௌரார்த்த சரீரகாய ।
தம்மில்லகாயை ச ஜடாதராய
நம: சிவாயை ச நம: சிவாய ॥

தங்க நிறங் கொண்ட பகுதி உடலையுடையவளும், கர்பூர வெண்ணிறமான பகுதி சரீரத்தையுடையவரும், கொண்டையிட்ட கேசத்தையுடையவளும், ஜடை தரித்தவரும், ஆகிய சிவைக்கும் சிவனுக்கும் நமஸ்காரம்.

(2)

कस्तूरिकाकुङ्कुमचर्चितायै
चितारजःपुञ्जविचर्चिताय ।
कृतस्मरायै विकृतस्मराय
नमः शिवायै च नमः शिवाय ॥

கஸ்தூரிகா குங்கும சர்சி தாயை
சிதாரஜ: புஞ்ஜ விசர்சிதாய ।
க்ருதஸ்மராயை விக்ருதஸ்மராய
நம: சிவாயை ச நம: சிவாய ॥

கஸ்தூரி கலந்த குங்குமம் பூசியவளும், மன்மதனை இயக்குபவளுமான பார்வதிக்கு நமஸ்காரம். சிதைப்பொடி பூசியவரும், மன்மதனை வீணாக்கியவருமான சிவனுக்கு நமஸ்காரம்.

(3)

झणत्क्वणत्कङ्कणनूपुरायै
पदाब्जराजत्फणिनूपुराय ।
हेमाङ्गदायै भुजगाङ्गदाय
नमः शिवायै च नमः शिवाय ॥

ஜணத் க்வணத் கங்கண நூபுராயை
பாதாப்ஜ ராஜத் பணி நூபுராய ।
ஹேமாங்கதாயை புஜகாங்கதாய
நம: சிவாயை ச நம: சிவாய ॥

பார்வதி தனது கையில் தங்கத் தோல்வளையும், காலில் கங்கணமும், சதங்கையும் அணிந்துள்ளாள் அவை கிலுங்கி ஓசையெழுப்புகின்றன. பரமேச்வரனோ திருவடிகளில் நாக - காற்சதங்கையும், தோள்வளையும் அணிந்துள்ளார். அவ்விருவருக்கும் நமஸ்காரம்.

(4)

विशालनीलोत्पललोचनायै
विकासिपङ्केरुहलोचनाय
समेक्षणायै विषमेक्षणाय
नमः शिवायै च नमः शिवाय ॥

விசால நீலோத்பல லோசனாயை
விகாஸி பங்கேருஹ லோசனாய ।
ஸமேக்ஷணாயை விஷமேக்ஷணாய
நம: சிவாயை ச நம: சிவாய ॥

இரட்டைப் படையில் மலர்ந்த கரு நெய்தல் பூ போன்ற கண்களையுடையவள் பார்வதி. ஒற்றைப்படையில் மலர்ந்த தாமர மலரொத்த கண்களையுடையவர் பரமேச்வரன். இவ்விருவருக்கும் நமஸ்காரம்.

(5)

मन्दारमालाकलितालकायै
कपालमालाङ्कितकन्धराय ।
दिव्याम्बरायै च दिगम्बराय
नमः शिवायै च नमः शिवाय ॥

மந்தார மாலா கலிதாலகாயை
கபால மாலாங்கித கந்தராய ।
திவ்யாம்பராயை ச திகம்பராய
நம: சிவாயை ச நம: சிவாய ॥

மிக நேர்த்தியான பட்டும், மந்தார மாலையும் அணிந்து காட்சி தருகிறாள் பார்வதி. திகம்பரனாயும், கழுத்தில் கபால மாலையணிந்தும் காட்சி தருகிறார் பரமேச்வரன். மங்களகரமான இந்த தம்பதியருக்கு நமஸ்காரம்.

(6)

अम्भोधरश्यामलकुन्तलायै
तटित्प्रभाताम्रजटाधराय ।
निरीश्वरायै निखिलेश्वराय
नमः शिवायै च नमः शिवाय ॥

அம்போதர ச்யாமல குந்தலாயை
தடித் ப்ரபா தாம்ரஜடாதராய ।
நிரீச்வராயை நிகலேச்வராய
நம: சிவாயை ச நம: சிவாய ॥

அகிலாண்டேச்வரியாக, நீருண்ட மேகமெனக் கரிய குந்தலக் கோகையுடன் பார்வதியும், அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகராய், மின்னலொளி போன்ற ஜடையுடன் பரமேச்வரனும் விளங்குகின்றனர். அவ்விருவருக்கும் நமஸ்காரம்.

(7)

प्रपञ्चसृष्ट्युन्मुखलास्यकायै
समस्तसंहारकताण्डवाय ।
जगज्जनन्यै जगदेकपित्रे
नमः शिवायै च नमः शिवाय ॥

ப்ரபஞ்ச ஸ்ருஷ்ட்யுன்முக லாஸ்ய காயை
ஸமஸ்தஸம்ஹாரக தாண்டவாய ।
ஜகஜ்ஜநந்யை ஜகதேகபித்ரே
நம: சிவாயை ச நம: சிவாய ॥

உலகப் படைப்பையே நோக்கங்கொண்டு நடனம் புரிகிறாள் உலக மாதா பார்வதி, உலகத் தந்தையாக, பிறிதொரு காலம், உலக முழுமையையாக்கும் தாண்டவம் புரிகிறார் பரமேசுவரன். அவ்விருவருக்கும் நமஸ்காரம்.

(8)

प्रदीप्तरत्नोज्ज्वलकुण्डलायै
स्फुरन्महापन्नगभूषणाय ।
शिवान्वितायै च शिवान्विताय
नमः शिवायै च नमः शिवाय ॥

ப்ரதீப்த ரத்னோஜ்வல குண்டலாயை
ஸ்புரன் மஹாபந்நக பூஷணாய ।
சிவான்விதாயை ச சிவான்விதாய
நம: சிவாயைச நம: சிவாய ॥

ஒளிமிக்க வைரங்கள் பதித்த குண்டலத்துடன் மங்களமாய் பார்வதியும், மிளிரும் நாகபூஷணமணிந்து மங்கள ஸ்வரூபியாய் சிவனும் காட்சி தர நான் அவர்களை நமஸ்கரிக்கிறேன்.

(9)

एतत्पठेदष्टकमिष्टदं यो
भक्त्या स मान्यो भुवि दीर्घजीवी ।
प्राप्नोति सौभाग्यमनन्तकालं
भूयात्सदा तस्य समस्तसिद्धिः ॥

ஏதத்படேத் அஷ்டக மிஷ்டதம் யோ
பக்த்யா ஸ மான்யோ புவி தீர்கஜீவீ ।
ப்ராப்னோதி ஸௌபாக்ய மனந்தகாலம்
பூயாத் ஸதா தஸ்ய ஸமஸ்த ஸித்தி: ॥

விருப்பங்களை நிறைவேற்றும் இவ் எட்டு சுலோகங்களை பக்தியுடன் படிப்பவர் பூவுலகில் மதிப்பிற்குரியவராய் நீண்ட ஆயுள் பெற்று எல்லா ஸௌபாக்கியங்களையும் பெறுவர்.

அர்த்தநாரீச்வர ஸ்தோத்ரம் முற்றிற்று

